10th March 1961]

SRI V. K. KOTHANDARAMAN : இந்த ரிஸிப்ஷன் ஹோமுக்கு போலீஸார் சிறு பிள்ளைகளைக் கொண்டுவரும்போது உணவு கொடுக்காமல் பட்டினி போட்டுக்கொண்டு வருகிறார்கள் என்பது பற்றித்தான் வேலூர் ரிசப்ஷன் ஹோமில் புகார் செய்யப்பட்டிருக்கிறது. அதுபோன்று இன்னும் பலயிடங்களிலும் இருக்குமென்று சொல்லப்படுகிறது. ஆகவே, இதுகுறித்து பரிசீலனை செய்யப்படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அங்கத்தினர் அவர்கள் கேட்கும் உப-கேள்வி முதலில் கேட்ட கேள்விதான். அது பற்றி நன்கு விசாரித்து அவ்வாறு உணவு கொடுக்காமல் இருப்பது இல்லை என்பது பற்றி தகவல் தெரிந்து விடையளித்தேன். அதற்கு மேல் விவரங்கள் என்னிடம் இல்லை.

* 732 Q.—SRI V. K. KOTHANDARAMAN: கனம் உள் துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

இளம் குற்றவாளிகள் அல்ல என்று கோர்ட்டில் நிரூபிக்கப்பட்ட பிறகு அவர்கள் தங்கள் ஊருக்கு திரும்பிப் போவதற்கு பணம் கொடுத்தோ அல்லது போலீஸ் துணை கொடுத்தோ அனுப்ப ஏற்பாடு செய்ய உத்தேசமுண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : According to the existing practice juveniles against whom no offences have been proved before the Courts are sent to their respective homes at Government cost with Police escort.

SRI V. K. KOTHANDARAMAN : தவறு செய்கிறார்களோ இல்லையோ, அவர்கள் பேரில் குற்றஞ்சாட்டி வழக்கு தொடர்ந்த பிறகு கோர்ட்டுக்கு கொண்டு வந்து அவர்கள் குற்றவாளிகள் அல்ல என்று சொன்ன பிறகு நடுவீதியில் விட்டுவிடுகிறார்கள். அவர்களை போலீஸ் மீண்டும் வீடுகளில் கொண்டு போய் விடும் நிலையில்லை. ஆகவே, மைனர் குழந்தைகள் மீண்டும் தவறு செய்யாமலிருக்க போலீஸார் மீண்டும் அவர்களை வீடுகளில் கொண்டு போய் விடுவதற்கு ஏற்பாடுகள் செய்யப்படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: அங்கத்தினர் அவர்கள் ஆங்கிலத்தில் சொல்வதை புரிந்து கொள்வார்கள் என்று நினைக்கிறேன். ஆங்கிலத்தில் சொன்னதை இப்பொழுது தமிழில் சொல்கிறேன். இப்பொழுது நடைபெறுகிற நடைமுறை, சிறுவர்களை கோர்ட்டுக்கு கொண்டு வருகிறபோது அவர்கள் பேரில் குற்றம் ஒன்றுமில்லையென்று ஏற்பட்டால் அவரவர்கள் வீடுகளுக்கு அரசாங்கச் செலவில் போலீஸ் காவலோடு அவர்கள் அனுப்பப்படுகிறார்கள்.